නව නිර්දේශය/புதிய பாடத்திட்டம்/New Syllabus

NEW

**ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව**
**இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்**
**Department of Examinations, Sri Lanka**

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2019 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2019 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2019

**07.08.2019 / 0830 – 1030**

නර්තනය (භරත) I
நாட்டியம் (பரதம்) I
Dancing (Baratha) I

**53 T I**

පැය දෙකයි
*இரண்டு மணித்தியாலம்*
*Two hours*

**அறிவுறுத்தல்கள் :**

- ✳ **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.
- ✳ விடைத்தாளில் தரப்பட்டுள்ள இடத்தில் உமது **சுட்டெண்ணை** எழுதுக.
- ✳ விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களைக் கவனமாக வாசித்துப் பின்பற்றுக.
- ✳ **1** தொடக்கம் **50** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் (1), (2), (3), (4), (5) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிந்தெடுத்து, **அதனைக் குறித்து நிற்கும் இலக்கத்தைத் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களுக்கு அமைய** விடைத்தாளில் **புள்ளடி** (×) இடுவதன் மூலம் காட்டுக.

**1.** “அம்மையே அப்பா ஒப்பிலா மணியே...” என விளிக்கப்படுபவர்
(1) விநாயகர் (2) சிவன் (3) முருகன் (4) விஷ்ணு (5) வைரவர்

**2.** சாத்வீக பாவங்களில் ‘வைவர்ணய’ என்பது
(1) குரல் மாற்றம் (2) நடுங்குதல் (3) புல்லரித்தல்
(4) கண்ணீர் விடுதல் (5) நிறமாற்றம்

**3.** பாட்டோ அல்லது ஜதியோ தாளம் தொடங்கும் முன் ஆரம்பித்தல்
(1) அதீதம் எனப்படும். (2) காகபாதம் எனப்படும். (3) சமம் எனப்படும்.
(4) புளுதம் எனப்படும். (5) அனாகதம் எனப்படும்.

**4.** அபிநயத்தின் கண்ணாடி எனப் பொருள்படும் நூல்
(1) நாட்டியசாஸ்திரம் (2) அபிநயசாரசம்புடம் (3) அபிநயதர்ப்பணம்
(4) பஞ்சமரபு (5) அபிநயநவநீதம்

**5.** ‘புறுகு’ எனப்படும் பாரமற்ற மரத்தினால் செய்யப்படும் ஆபரணங்களை அணிந்துகொண்டு ஆடும் சாஸ்திரிய நடனம்
(1) பரதநாட்டியம் (2) மோகினி ஆட்டம் (3) கதகளி
(4) குச்சுப்புடி (5) ஒடிசி

**6.** நாட்டியசாஸ்திரத்தில் 108 கரணங்களையும் விளக்கும் அத்தியாயம் எது?
(1) நான்காம் அத்தியாயம் (2) பத்தாம் அத்தியாயம் (3) எட்டாம் அத்தியாயம்
(4) ஐந்தாம் அத்தியாயம் (5) இரண்டாம் அத்தியாயம்

**7.** குறித்த இடத்திற்கு நாயகன் வராமையால் ஏமாற்றமும் அவமானமும் அடையும் அஷ்டவித நாயகிகளுள் ஒருவர்
(1) சுவாதீனபதிகா (2) விப்ரலப்தா (3) அபிசாரிகா
(4) கண்டிதா (5) விரகோத்கண்டிதா

**8.** விபாவங்களின் விளைவுகள் எனக் குறிப்பிடப்படுவது
(1) ஸ்தாயி பாவம் (2) சஞ்சாரி பாவம் (3) சாத்வீக பாவம்
(4) அனுபாவம் (5) விபாவம்

**9.** பதினொருவகை ஆடல்களில் துடியாடலை ஆடிய கடவுள்
(1) திருமால் (2) திருமகள் (3) முருகன் (4) சிவன் (5) காளி

**10.** பல்லவர்காலக் கோயில்களிலே நடனப்பணி செய்து வந்த நடனமாதர்களை 'சேயிழையார்' எனக் குறிப்பிடும் பக்தி இலக்கியம்
(1) தேவாரம் (2) திருமந்திரம்
(3) பெரியபுராணம் (4) ஆழ்வார் பாசுரங்கள்
(5) திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம்

**11.** பின்வருவனவற்றுள் மலையகத்தில் சிறப்பாக ஆடப்படும் கூத்துக்களை மட்டும் கொண்ட விடையினைத் தெரிவுசெய்க.
(1) வசந்தன் கூத்து, வாசாப்புக் கூத்து (2) வடமோடிக் கூத்து, தென்மோடிக் கூத்து
(3) அருச்சுணன் தபசு, காமன் கூத்து (4) வடபாங்குக் கூத்து, தென்பாங்குக் கூத்து
(5) மகிடிக் கூத்து, பறைமேளக் கூத்து

**12.** 'பந்தேரு' எனும் உருப்படி இடம்பெறும் சாஸ்திரிய நடனம் யாது?
(1) சப்ரகமுவ நடனம் (2) றுகுணு நடனம் (3) கோலம்
(4) சொக்கரி (5) கண்டிய நடனம்

**13.** நான்குவகை உதரா நாட்டியம் நிகழ்த்தியதாக ரகுநாதநாயக்கரினால் குறிப்பிடப்படும் பெண்
(1) ஊர்வசி (2) சந்திரலேகா (3) ரம்பா (4) ரூபவதி (5) கோமளவல்லி

**14.** அஷ்டபதி எனும் உருப்படி பாடப்பட்டுள்ள மொழி
(1) தமிழ் (2) வடமொழி (3) தெலுங்கு (4) கன்னடம் (5) ஹிந்தி

**15.** சங்கீர்ணஜாதி துருவதாளம், திஸ்ரகதி அடையும்போது எடுத்துக்கொள்ளப்படும் எண்ணிக்கை
(1) 14 (2) 17 (3) 23 (4) 29 (5) 87

**16.** பின்வருவனவற்றுள் வீணை தயாரிக்கப் பயன்படுத்தப்படும் மரங்கள்
(1) மா, வேம்பு, தேக்கு (2) மலைவேம்பு, ஆல், அரசு (3) திருவாத்தி, வேம்பு, நாவல்
(4) பலா, கருங்காலி, ஆடும்பர (5) பூவரசு, நாவல், விளாத்தி

**17.** 'கோஷயாத்ரா' எனும் நூலில் குறிப்பிடப்படும் சாஸ்திரிய நடனம்
(1) பரதநாட்டியம் (2) மோகினியாட்டம் (3) குச்சுப்புடி (4) கதகளி (5) ஒடிசி

**18.** ஆற்றுகையின்போது அரண்மனை , மலைகள், மரங்கள் போன்றவற்றை சிறிய உருக்களாக்கி அரங்கிற்குக் கொண்டுவரப்படும் ஆஹார்ய அபிநயம்
(1) அலங்காரம் (2) அங்கரச்சனம் (3) புஷ்டம் (4) சஞ்சீவம் (5) அபிசாரி

**19.** கதகளி ஒப்பனையில் பச்சை வேஷத்தால் குறிக்கப்படுவது
(1) தீய குணம் (2) பாதி மனித உரு, பாதி அனுமான்
(3) வேடர்கள் (4) நற்குணம்
(5) பூர்வீகக் குடிகள்

**20.** பூர்வாங்கம், உத்தராங்கம் எனும் பகுதிகளை உடைய உருப்படி
(1) பதம் (2) கீர்த்தனம் (3) பதவர்ணம் (4) தில்லானா (5) சப்தம்

**21.** இலங்கையில் முதன்முதலாக, பரத நாட்டியத்திற்கு நுண்கலைமாணிப் பட்டம் வழங்கிய பல்கலைக்கழகம்
(1) யாழ்ப்பாணப் பல்கலைக்கழக இராமநாதன் நுண்கலைக்கழகம்
(2) றுகுணு பல்கலைக்கழகம்
(3) சுவாமி விபுலாநந்த அழகியற் கற்கைகள் நிறுவகம், கிழக்குப் பல்கலைக்கழகம்
(4) இரஜரட்டைப் பல்கலைக்கழகம்
(5) கட்புல அரங்கேற்றக் கலைகள் பல்கலைக்கழகம், கொழும்பு

22. தகதிகு ததிங்கிணதொம், தகததிங்கிணதொம், ததிங்கிணதொம், கிணதொம் எனும் முடிவுத் தீர்மானம் அமைந்துள்ள யதி அமைப்பு
(1) டமருக யதி எனப்படும். (2) கோபுச்ச யதி எனப்படும். (3) ஸ்ரோதோவக யதி எனப்படும்.
(4) விசம யதி எனப்படும். (5) மிருதங்க யதி எனப்படும்.

23. சகுந்தலையின் சோகத்திற்கு ஆலம்பன விபாவமாக அமைவது
(1) நடுக்கம் (2) மயக்கம் (3) கண்ணீர் (4) மூச்செறிதல் (5) சாபம்

24. ஒலியமைப்பின் உத்திகளில் கிராமப்புறத்தைக் காட்டப் பயன்படுத்தப்படும் பின்னணி ஓசைகளைக் கொண்ட விடையினைத் தெரிவுசெய்க.
(1) அடிதடி ஓசை, நாய் குரைக்கும் ஓசை
(2) ஓடுகின்ற கார், பேருந்து, முச்சக்கரவண்டி என்பவற்றிலிருந்து எழும் ஓசைகள்
(3) பண்டங்களை விற்போரது குரல், ஓடுகின்ற புகைவண்டி எஞ்சினின் ஓசை
(4) மாட்டுவண்டி ஓட்டும் சத்தம், தெம்மாங்கு ஓசை
(5) ஆந்தையின் அலறல், பறவைகள் கீச்சிடும் ஓசை

25. கைகளில் வண்ணக் குட்டைகளை வைத்து ஆடும் ஆடல்
(1) கோலாட்டம் ஆகும். (2) பொம்மலாட்டம் ஆகும். (3) காவடியாட்டம் ஆகும்.
(4) மயிலாட்டம் ஆகும். (5) ஒயிலாட்டம் ஆகும்.

26. லகுவின் எண்ணிக்கையை நிர்ணயிப்பது
(1) கிரஹம் (2) ஜாதி (3) கிரியை (4) மார்க்கம் (5) காலம்

27. முற்காலத்தில் மழை பெய்யும் என்ற நம்பிக்கையில் நிகழ்த்தப்பட்ட கூத்து யாது?
(1) மகிடிக் கூத்து (2) வடமோடிக் கூத்து (3) தென்மோடிக் கூத்து
(4) வசந்தன் கூத்து (5) காமன் கூத்து

28. நடராஜர் திருவுருவத்தில் இறைவனின் எண்குணங்களுள் ஒன்றாகிய அளவில்லா ஆற்றலைக் குறித்து நிற்பது
(1) குமின் சிரிப்பு (2) பிறை (3) கங்கை (4) முக்கண் (5) மான்

29. ஸ்தாயி பாவங்களில் 'விஸ்மய' என்பது
(1) வெறுப்பு எனப்படும். (2) கோபம் எனப்படும். (3) உற்சாகம் எனப்படும்.
(4) சாந்தம் எனப்படும். (5) ஆச்சரியம் எனப்படும்.

30. 'சதுர்தண்டிப் பிரகாசிகா' எனும் நூலில் 72 மேளகர்த்தா இராகங்களின் அமைப்பைக் கூறியவர்
(1) தியாகராஜ சுவாமிகள் ஆவார். (2) வேங்கடமகி ஆவார்.
(3) பரதர் ஆவார். (4) நந்திகேஸ்வரர் ஆவார்.
(5) தண்டுமுனிவர் ஆவார்.

31. தஞ்சை நால்வரது தந்தையார்
(1) தஞ்சாவூர் சுப்பராய நட்டுவனார் ஆவார்.
(2) முத்துத் தாண்டவர் ஆவார்.
(3) அருணாசல நட்டுவனார் ஆவார்.
(4) கங்கை முத்து நட்டுவனார் ஆவார்.
(5) பந்தனை நல்லூர் மீனாட்சி சுந்தரம்பிள்ளை ஆவார்.

32. தூதிகளில் சமயத்திற்குத் தகுந்தபடி உருமாறுதல், வேடம் புனைதல் முதலியவற்றில் சிறந்தவள்
(1) தூதி (2) சகி (3) தாத்ரேயி (4) இலிங்கினி (5) சேடி

33. பின்வருவனவற்றுள் ஒருமுகத் தோற்கருவி
(1) தப்பு (2) தவில் (3) மிருதங்கம் (4) மத்தளம் (5) உறுமி

34. முதலாவது 'தத்தெய்தாம் தித்தெய்தாம்' அடவின் இறுதியில் பிரயோகிக்கப்படும் உத்பிளவன பாதபேதம்
(1) குட்டணம் (2) கத்தரி (3) மோடிதம்
(4) அலகம் (5) அஷ்வோத் பிளவனம்

**35.** "எடுத்த பொற்பாதமும் காணப்பெற்றால்..." எனும் அப்பர் பாடிய தேவார அடியின் மூலம் குறிப்பிடப்படும் இறைவனின் திருவுருவம்
(1) அர்த்த நாரீஸ்வரர் (2) சோமஸ்கந்தர் (3) லிங்கோற்பவர்
(4) பரமேஸ்வரர் (5) நடராஜர்

**36.** ; ; , த, திங், கி, ண, தொம்த, / திங், கி, ண, தொம்த / ,திங், கி, ண, தொம் // மேற்படி தாளாங்கத்தில் அடங்கக்கூடிய ததிங்கிணதொம் அமைந்துள்ள ஜாதி
(1) சங்கீர்ணம் (2) திஸ்ரம் (3) கண்டம் (4) சதுஸ்ரம் (5) மிஸ்ரம்

**37.** சொற்களாலும் செயல்களாலும் வேடிக்கை காட்டிக் கதைக்குப் பாலம் அமைக்கும் பாத்திரமாக 'கோணங்கி' இடம்பெறும் ஆடல் வடிவம்
(1) யக்ஷகானம் (2) குற்றாலக்குறவஞ்சி (3) ஒடிசி
(4) மணிப்புரி (5) பாகவதமேளம்

**38.** தீரசாந்தன் என்ற நாயகனுக்கு உதாரணமாக அமைபவர்
(1) புத்தர் (2) இராவணன் (3) ஸ்ரீ கிருஷ்ணன் (4) கோவலன் (5) அருச்சுணன்

**39.** தலைக்கோலியர் ஆடலாசான்களாகத் திகழ்ந்ததை "அரங்கியல் மகளிர்க்கு ஆடல் வகுக்கும் தலைக்கோல் பெண்டிர்" எனும் பாடலடி மூலம் விளக்கும் நூல்
(1) சிலப்பதிகாரம் (2) குணநூல் (3) சயந்தம் (4) மணிமேகலை (5) பெருங்கதை

**40.** பின்வருவனவற்றுள் 'தகதிமி தகிட' எனும் ஜாதியில் அமைந்த ததிங்கிணதொம் வரிசை
(1) ததிங்கிணதொம் (2) ததிங், கிணதொம் (3) த, திங், கிணதொம்
(4) த, திங், கி, ண, தொம் (5) ததிங், கி, ண, தொம்

● **41** தொடக்கம் **45** வரையான வினாக்களுக்கு பின்வரும் அட்டவணையைப் பயன்படுத்தி மிகப் பொருத்தமான விடையைத் தெரிவுசெய்க.

| ரஸங்கள் | தேவதை | எதிர் ரஸம் | நிறம் | ஸ்தாயி பாவம் |
|---|---|---|---|---|
| சிருங்காரம் | விஷ்ணு | பீபத்ஸம் | பச்சை | ரதி |
| கருணா | A | ஹாஸ்யம் | சாம்பல் | ஷோக |
| B | ருத்ரன் | அற்புதம் | சிவப்பு | க்ரோத |
| வீரம் | இந்திரன் | C | வெளிர் சிவப்பு | உத்ஸாஹ |
| பீபத்ஸம் | சிவன் | சிருங்காரம் | D | ஜீகுப்ஸா |
| அற்புதம் | பிரமன் | ரௌத்திரம் | மஞ்சள் | E |

**41.** A இல் இடம்பெறவேண்டிய தேவதை
(1) புத்தர் (2) எமன் (3) மகாகாலன் (4) இந்திரன் (5) விஷ்ணு

**42.** B இல் இடம்பெறவேண்டிய ரஸம்
(1) சாந்தம் (2) ஹாஸ்யம் (3) பயானகம் (4) ரௌத்ரம் (5) கருணா

**43.** C இல் இடம்பெறவேண்டிய எதிர் ரஸம்
(1) கருணா (2) ஹாஸ்யம் (3) பயானகம் (4) அற்புதம் (5) சிருங்காரம்

**44.** D இல் இடம்பெறவேண்டிய நிறம்
(1) வெள்ளை (2) நீலம் (3) பச்சை (4) கறுப்பு (5) மஞ்சள்

**45.** E இல் இடம்பெறவேண்டிய ஸ்தாயி பாவம்
(1) பய (2) ஹாஸ (3) ஷோக (4) விஸ்மய (5) க்ரோத

**46.** இப்படத்தில் காணப்படும் இசைக்கருவி .................................. ஆகும்.
(1) மத்தளம்
(2) மிருதங்கம்
(3) தப்பு
(4) தவில்
(5) பறை



**47.** இப்படத்தில் காணப்படும் நாட்டியக் கலைஞர் .................................. ஆவார்.
(1) கீதாஞ்சலி வி. கே. நல்லையா
(2) பிரம்மஸ்ரீ வீரமணி ஐயர்
(3) திரு. ந. இராசரத்தினம்
(4) திரு. க. தொம்மக்குட்டி
(5) திரு. ம. கைலாயபிள்ளை



**48.** இப்படத்தில் காட்டப்பட்டுள்ள பரதநாட்டிய அணிகலன்கள் .............................. என்பனவாகும்.
(1) இராக்கொடி, குஞ்சம்
(2) சிமிக்கி, காதுமாட்டி
(3) நெற்றிவரி, உச்சிவரி
(4) புலாக்கு, நத்து
(5) சந்திரபிறை, சூரியபிறை



**49.** இப்படத்தில் வெளிப்படுத்தப்பட்டிருக்கும் சாஸ்திரிய நடனம் .................................. ஆகும்.
(1) கதகளி
(2) கதக்
(3) மணிப்புரி
(4) குச்சுப்புடி
(5) சப்ரகமுவ நடனம்



**50.** இப்படத்தில் காட்டப்பட்டுள்ள ஆடல் வகை .................................. ஆகும்.
(1) மானாட்டம்
(2) புலியாட்டம்
(3) மயிலாட்டம்
(4) பொம்மலாட்டம்
(5) குதிரையாட்டம்



* * *

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்

## අ.පො.ස. (උ.පෙළ) විභාගය/ க.பொ.த. (உயர் தர)ப் பரீட்சை - 2019

## නව නිර්දේශය/ புதிய பாடத்திட்டம

| විෂය අංකය பாட இலக்கம் | 53 | විෂයය பாடம் | பரத நாட்டியம் |
|---|---|---|---|

## ලකුණු දීමේ පටිපාටිය/புள்ளி வழங்கும் திட்டம்

### I පත්‍රය/பத்திரம் I

| ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරු අංකය விடை இல. | ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරු අංකය விடை இல. | ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරු අංකය விடை இல. | ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරු අංකය விடை இல. | ප්‍රශ්න අංකය வினா இல. | පිළිතුරු අංකය விடை இல. |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 01. | 2 | 11. | 3 | 21. | 1 | 31. | 1 | 41. | 2 |
| 02. | 5 | 12. | 5 | 22. | 2 | 32. | 4 | 42. | 4 |
| 03. | 1 | 13. | 3 | 23. | 5 | 33. | 1 | 43. | 3 |
| 04. | 3 | 14. | 2 | 24. | 4 | 34. | 3 | 44. | 2 |
| 05. | 4 | 15. | 5 | 25. | 5 | 35. | 5 | 45. | 4 |
| 06. | 1 | 16. | 4 | 26. | 2 | 36. | 1 | 46. | 1 |
| 07. | 2 | 17. | 2 | 27. | 4 | 37. | 5 | 47. | 2 |
| 08. | 4 | 18. | 3 | 28. | 3 | 38. | 1 | 48. | 4 |
| 09. | 3 | 19. | 4 | 29. | 5 | 39. | 5 | 49. | 1 |
| 10. | 1 | 20. | 3 | 30. | 2 | 40. | 3 | 50. | 5 |

✪ විශේෂ උපදෙස්/ விசேட அறிவுறுத்தல் :

එක් පිළිතුරකට/ ஒரு சரியான விடைக்கு 02 ලකුණු බැගින්/புள்ளி வீதம்

මුළු ලකුණු/மொத்தப் புள்ளிகள் 2 × 50 = 100

# வினாத்தாளின் குறிக்கோள் பற்றிய அறிமுகம்

## முதலாம் பகுதி வினாவுக்கான குறிக்கோள்கள்

1. “அம்மையே அப்பா ஒப்பிலா மணியே” என விளிக்கப்படுபவர் யார் என அறிந்து கொள்வர்.
2. சாத்வீக பாவங்களில் “வைவர்ணய” என்பதன் பொருளைக் கூறுவர்.
3. பாட்டோ அல்லது ஜதியோ தாளம் தொடங்கும் முன் ஆரம்பிப்பது எது என அறிந்து கூறுவர்.
4. அபிநயத்தின் கண்ணாடி எனப் பொருள்படும் நூலைத் தெரிந்து கொள்வர்.
5. “புறுகு” எனப்படும் பாரமற்ற மரத்தினால் செய்யப்படும் ஆபரணங்களை அணிந்து கொண்டு ஆடும் சாஸ்திரிய நடனத்தினைத் தெரிந்து கூறுவர்.
6. நாட்டிய சாஸ்திரத்தில் 108 கரணங்களையும் விளக்கும் அத்தியாயத்தைக் கூறுவர்.
7. குறித்த இடத்திற்கு நாயகன் வராமையால் ஏமாற்றமும் அவமானமும் அடையும் அஷ்டவித நாயகி யார் என்று கூறுவர்.
8. விபாவங்களின் விளைவு எது எனக் கூறுவர்.
9. பதினொரு வகை ஆடல்களில் துடியாடல் ஆடிய கடவுளைக் கூறுவர்.
10. பல்லவர் காலக் கோயில்களிலே நடனப்பணி செய்து வந்த நடனமாதர்களை “சேயிழையார்” எனக் குறிப்பிடும் பக்தி இலக்கியம் எது என அறிந்து கூறுவர்.
11. மலையகத்தில் சிறப்பாக ஆடப்படும் கூத்துக்களை மட்டும் கொண்ட விடையினைத் தெரிவு செய்து கூறுவர்.
12. “பந்தேரு” எனும் உருப்படி இடம்பெறும் சாஸ்திரிய நடனத்தை இனங்கண்டு கூறுவர்.
13. நான்கு வகை உதரா நாட்டியம் நிகழ்த்தியதாக ரகுநாத நாயக்கரினால் குறிப்பிடப்படும் பெண்ணைத் தெரிந்து கொள்வர்.
14. அஷ்டபதி எனும் உருப்படி பாடப்பட்டுள்ள மொழியினை அறிந்து கூறுவர்.
15. சங்கீர்ண ஜாதி துருவ தாளம் திஸ்ர கதி அடையும் பொழுது எடுத்துக்கொள்ளப்படும் எண்ணிக்கையைக் கூறுவர்.
16. வீணை தயாரிக்கப் பயன்படுத்தப்படும் மரங்களைக் கூறுவர்.
17. “கோஷயாத்ரா” எனும் நூலில் குறிப்பிடப்படும் சாஸ்திரிய நடனத்தினை அறிந்து கூறுவர்.
18. ஆற்றுகையின் போது அரண்மனை, மலைகள், மரங்கள் போன்றவற்றைச் சிறிய உருக்களாக்கி அரங்கிற்கு கொண்டு வரப்படும் ஆகார்ய அபிநயத்தைத் தெரிந்து கொள்வர்.
19. கதகளி ஒப்பனையில் பச்சை வேஷத்தால் குறிப்பிடப்படுவது எது என அறிந்து கொள்வர்.
20. பூர்வாங்கம், உத்தராங்கம் எனும் பகுதிகளை உடைய உருப்படியை அறிந்து கொள்வர்.
21. இலங்கையில் முதன் முதலில் பரத நாட்டியத்திற்கு நுண்கலைமானிப் பட்டம் வழங்கிய பல்கலைக்கழகத்தை தெரிந்து கொள்வர்.
22. தக திகு ததிங்கிணதொம், தகததிங்கிணதொம், ததிங்கிணதொம், கிணதொம் எனும் முடிவுத் தீர்மானம் அமைந்துள்ள யதி அமைப்பை இனங்கண்டு கூறுவர்.
23. சகுந்தலையின் சோகத்திற்கு ஆலம்பன விபாகமாக அமைவது எது எனத் தெரிந்து கொள்வர்.
24. ஒளியமைப்பின் உத்திகளில் கிராமப் புறத்தைக் காட்டப் பயன்படுத்தப்படும் பின்னணி ஓசைகளை அறிந்து கூறுவர்.

25.கைகளில் வண்ணக் குட்டைகளை வைத்து ஆடும் ஆடலை அறிந்து கொள்வர்.

26.லகுவின் எண்ணிக்கையை நிர்ணயிப்பது எது எனக் கூறுவர்.

27.முற்காலத்தில் மழை பெய்யும் என்ற நம்பிக்கையில் நிகழ்த்தப்பட்ட கூத்தினை தெரிந்து கொள்வர்.

28.நடராஜர் திருவுருவத்தில் இறைவனின் எண்குணங்களுள் ஒன்றாகிய அளவில்லா ஆற்றலைக் குறித்து நிற்பது எது என இனங்கண்டு கூறுவர்.

29.ஸ்தாயி பாவங்களில் “விஸ்மய” என்பது எது எனத் தெரிந்து கொள்வர்.

30.“சதுர்தண்டிப்பிரகாசிகா” எனும் நூலில் 72 மேளகர்த்தா இராகங்களின் அமைப்பைக் கூறியவரை அறிந்து கொள்வர்.

31. தஞ்சை நால்வரது தந்தையாரை இனங்கண்டு கூறுவர்.

32.தூதிகளில் சமயத்திற்குத் தகுந்தபடி உருமாறல், வேடம் புனைதல் முதலியவற்றில் சிறந்தவள் யார் எனக் கூறுவர்.

33. ஒரு முகத் தோற் கருவியை அறிந்து கொள்வர்.

34. முதலாவது “தத்தெய் தாம் தித்தெய் தாம்” அடவின் இறுதியில் பிரயோகிக்கப்டும் உத்பிளவன பாதபேதம் எது எனத் தெரிந்து கொள்வர்.

35.“எடுத்த பொற்பாதமும் காணப்பெற்றால்” எனும் அப்பர் பாடிய தேவார அடியின் மூலம் குறிப்பிடப்படும் இறைவனின் திருவுருவத்தை அறிந்து கொள்வர்.

36. ;; , த, திங், கி, ண, தொம் த, / திங், கி, ண தொம் த / திங், கி, ண, தொம் // மேற்படி தாளங்கத்தில் அடங்கக்கூடிய ததிங்கிணதொம் அமைந்துள்ள ஜாதியை கணித்துக் கூறுவர்.

37.சொற்களாலும் செயல்களாலும் வேடிக்கை காட்டிக் கதைக்குப் பாலம் அமைக்கும் பாத்திரமாக “கோணங்கி” இடம்பெறும் ஆடல் வடிவம் எது எனக் கூறுவர்.

38.தீர சாந்தன் என்ற நாயகனுக்கு உதாரணமாக அமைபவர் யார் எனக் கூறுவர்.

39.தலைக்கோலியர் ஆடல் ஆசான்களாகத் திகழ்ந்ததை “அரங்கியல் மகளிருக்கு ஆடல் வகுக்கும்” தலைகோல் பெண்டிர்” எனும் பாடலடி மூலம் விளக்கும் நூலை அறிந்து கூறுவர்.

40.“தகதிமி தகிட” எனும் ஜாதியில் அமைந்த ததிங்கிணதொம் வரிசை எது என இனங்கண்டு கூறுவர்.

41. A யில் இடம்பெறும் தேவைதையை அறிந்து கூறுவர்.

42.B யில் இடம்பெற வேண்டிய இரசத்தினைத் தெரிந்து கூறுவர்.

43.C யில் இடம்பெற வேண்டிய எதிர் இரசத்தினைத் தெரிந்து கொள்வர்.

44.D யில் இடம்பெற வேண்டிய நிறத்தினைத் தெரிந்து கொள்வர்.

45.E யில் இடம்பெற வேண்டிய ஸ்தாயி பாவத்தைத் தெரிந்து கூறுவர்.

46. படத்தில் காணப்படும் இசைக்கருவியை இனங்கண்டு கூறுவர்.

47. படத்தில் காணப்படும் நாட்டியக் கலைஞரைத் தெரிந்து கொள்வர்.

48. படத்தில் காட்டப்பட்டுள்ள பரதநாட்டிய அணிகலன்களை இனங்காண்பர்.

49. படத்தில் வெளிப்படுத்தப்பட்டிருக்கும் சாஸ்திரிய நடனத்தினை அறிந்து கொள்வர்.

50.படத்தில் காட்டப்பட்டுள்ள ஆடல் வகையைத் தெரிந்து கொள்வர்.

නව නිර්දේශය/புதிய பாடத்திட்டம்/New Syllabus

NEW

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2019 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2019 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2019

නර්තනය (භරත) II
நாட்டியம் (பரதம்) II
Dancing (Baratha) II

53 T II

08.08.2019 / 0830 – 1140

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

අමතර කියවීම් කාලය - මිනිත්තු 10 යි
மேலதிக வாசிப்பு நேரம் - 10 நிமிடங்கள்
Additional Reading Time - 10 minutes

வினாப்பத்திரத்தை வாசித்து, வினாக்களைத் தெரிவுசெய்வதற்கும் விடை எழுதும்போது முன்னுரிமை வழங்கும் வினாக்களை ஒழுங்கமைத்துக் கொள்வதற்கும் மேலதிக வாசிப்பு நேரத்தைப் பயன்படுத்துக.

**அறிவுறுத்தல்கள் :**

※ **பகுதி I** இல் முதலாம் வினா உட்பட **இரண்டு** வினாக்களையும் **பகுதி II** இல் எவையேனும் **மூன்று** வினாக்களையும் தெரிவுசெய்து, எல்லாமாக **ஐந்து** வினாக்களுக்கு மாத்திரம் விடை எழுதுக.

## பகுதி I

**1.** (i) நீர் கற்ற பதவர்ணத்தின் இராகம், தாளம் என்பவற்றைத் தருக. (02 புள்ளிகள்)

(ii) நீர் கற்ற பதவர்ணத்தின் பாடலை எழுதியவர், நாட்டிய அமைப்புச் செய்தவர் ஆகியோரைக் குறிப்பிடுக. (02 புள்ளிகள்)

(iii) நீர் கற்ற பதவர்ணத்தின் முதலாவது சரணஸ்வரக் கோர்வையினைத் தாள அங்கக் குறியீட்டுடன் எழுதுக. (06 புள்ளிகள்)

(iv) நீர் கற்ற பதவர்ணத்தின் முதலாவது தீர்மானத்தினை தாள அங்கக் குறியீட்டுடன் எழுதுக. (10 புள்ளிகள்)

**2.** (i) குச்சுப்புடி நடனத்தின் தோற்றம் பற்றிக் குறிப்பிடுக. (03 புள்ளிகள்)

(ii) குச்சுப்புடி நடனத்திற்குப் பயன்படுத்தப்படும் ஆடை, அணிகலன்களைக் குறிப்பிடுக. (03 புள்ளிகள்)

(iii) குச்சுப்புடி நடனக் கலைஞர்கள் இருவரின் பெயர்களைக் குறிப்பிட்டு, இந்நடனத்தில் பயன்படுத்தப்படும் இசைக்கருவிகளையும் குறிப்பிடுக. (04 புள்ளிகள்)

(iv) குச்சுப்புடி நடன நாடகங்கள் பற்றி விளக்குக. (05 புள்ளிகள்)

(v) குச்சுப்புடி நடனம் வளர்ச்சியடைந்த விதத்தைப் பற்றி விளக்கி எழுதுக. (05 புள்ளிகள்)

**3.** (i) தாள தசப்பிராணன்களைக் குறிப்பிடுக. (02 புள்ளிகள்)

(ii) 'யதி' என்பதற்கு விளக்கம் தருக. (03 புள்ளிகள்)

(iii) யதியின் வகைகளைக் குறிப்பிடுக. (03 புள்ளிகள்)

(iv) யதியின் வகைகளை விரிவாக விளக்குக. (12 புள்ளிகள்)

## பகுதி II

**4.** (i) சப்த தாளங்களைக் குறிப்பிடுக. (02 புள்ளிகள்)

(ii) சப்த தாளங்களின் தாள அங்கக் குறியீடுகளை எழுதுக. (03 புள்ளிகள்)

(iii) சப்த தாளங்கள் 35 தாளங்களாகும் வகையினை உதாரணங்களுடன் விளக்குக. (05 புள்ளிகள்)

(iv) 35 தாளங்கள் 175 தாளங்களாகும் வகையினை உதாரணங்களுடன் விளக்குக. (10 புள்ளிகள்)

**5.** (i) சங்ககால ஆடற் கலைஞர்களின் பெயர்களைக் குறிப்பிடுக. (02 புள்ளிகள்)

(ii) சங்ககால ஆடல் வகைகளில் குரவை, துணங்கை, வெறியாட்டு என்பன பற்றி தனித்தனியே விளக்குக. (08 புள்ளிகள்)

(iii) சங்ககால ஆடல்கள் மக்களது வாழ்வியலோடு ஒன்றிணைந்திருந்தமையினை உதாரணங்களுடன் விளக்குக. (10 புள்ளிகள்)

**6.** பின்வருவனவற்றிற்குச் சிறுகுறிப்பு எழுதுக.

(i) மகிடிக்கூத்து

(ii) கலாஷேத்திரா

(iii) அபிநயதர்ப்பணம்

(iv) தூதர் இலட்சணங்கள் ($4 \times 5 = 20$ புள்ளிகள்)

**7.** கலைச்செல்வன் ஏரம்பு சுப்பையா அவர்களின் வாழ்க்கை வரலாற்றினைக் குறிப்பிட்டு, அவர் ஆற்றிய கலைப்பணிகளை விளக்குக. (20 புள்ளிகள்)

**8.** "கிராமியக் கலைகள் மக்களது சமூக, சமய வாழ்வியலுடன் பின்னிப் பிணைந்துள்ளன." இக்கூற்றின் பொருத்தப்பாட்டினை விளக்குக. (20 புள்ளிகள்)

***

# பகுதி II

**வினா - 1**

i. பதவர்ணத்தின் இராகம், தாளம் என்பவற்றைக் குறிப்பிட்டிருப்பின் - (02 புள்ளிகள்)
ii. பதவர்ணத்தின் பாடலை எழுதியவர், நாட்டிய அமைப்புச் செய்தவர் ஆகியோரது பெயர்களைக் குறிப்பிட்டிருப்பின் - (02 புள்ளிகள்)
iii. பதவர்ணத்தின் முதலாவது சரணஸ்வரக் கோர்வையினைத் தாள அங்கக் குறியீட்டுடன் எழுதியிருப்பின் - (06 புள்ளிகள்)
iv. பதவர்ணத்தின் முதலாவது தீர்மானத்தினைத் தாள அங்கக் குறியீட்டுடன் எழுதியிருப்பின் - (10 புள்ளிகள்)

**வினா - 2**

i. குச்சுப்புடி நடனத்தின் தோற்றம் பற்றிக் குறிப்பிட்டிருப்பின் - (03 புள்ளிகள்)
ii. குச்சுப்புடி நடனத்திற்குப் பயன்படுத்தப்படும் ஆடல், அணிகலன்களைக் குறிப்பிட்டிருப்பின் - (03 புள்ளிகள்)
iii. குச்சுப்புடி நடனக் கலைஞர்கள் இருவரின் பெயர்களைக் குறிப்பிட்டு, இந்நடனத்தில் பயன்படுத்தப்படும் இசைக்கருவிகளையும் குறிப்பிட்டிருப்பின் - (04 புள்ளிகள்)
iv. குச்சுப்புடி நடன நாடகங்கள் பற்றி விளக்கியிருப்பின் - (05 புள்ளிகள்)
v. குச்சுப்புடி நடனம் வளர்ச்சி அடைந்த விதத்தைப் பற்றி விளக்கி எழுதியிருப்பின் - (05 புள்ளிகள்)

**வினா - 3**

i. தாளதசப்பிராணன்களைக் குறிப்பிட்டிருப்பின் - (02 புள்ளிகள்)
ii. "யதி" என்பதற்கு விளக்கம் எழுதியிருப்பின் - (03 புள்ளிகள்)
iii. யதியின் வகைகளைக் குறிப்பிட்டிருப்பின் - (03 புள்ளிகள்)
iv. யதியின் வகைகளை விரிவாக விளக்கியிருப்பின் - (12 புள்ளிகள்)

**வினா - 4**

i. சப்த தாளங்களைக் குறிப்பிட்டிருப்பின் - (02 புள்ளிகள்)
ii. சப்த தாளங்களின் தாள அங்கக் குறியீடுகளை எழுதியிருப்பின் - (03 புள்ளிகள்)
iii. சப்த தாளங்கள் 35 தாளங்களாகும் வகையினை உதாரணங்களுடன் விளக்கியிருப்பின் - (05 புள்ளிகள்)
iv. 35 தாளங்கள் 175 தாளங்களாகும் வகையினை உதாரணங்களுடன் விளக்கியிருப்பின் - (10 புள்ளிகள்)

**வினா - 5**

i. சங்ககால ஆடற்கலைஞர்களின் பெயர்களைக் குறிப்பிட்டிருப்பின் - (02 புள்ளிகள்)
ii. சங்ககால ஆடல் வகைகளில் குரவை, துணங்கை, வெறியாட்டு என்பன பற்றித் தனித்தனியே விளக்கியிருப்பின் - (08 புள்ளிகள்)
iii. சங்ககால ஆடல்கள் மக்களது வாழ்வியலோடு ஒன்றிணைந்திருந்தமையினை உதாரணங்களுடன் விளக்கியிருப்பின் - (10 புள்ளிகள்)

**வினா - 6**

i. மகிடிக்கூத்து - (05 புள்ளிகள்)
ii. கலாஷேத்ரா - (05 புள்ளிகள்)
iii. அபிநய தர்ப்பணம் - (05 புள்ளிகள்)
iv. தூதர் இலட்சணங்கள் - (05 புள்ளிகள்)

**வினா - 7**

கலைச்செல்வன் ஏரம்பு சுப்பையா அவர்களின் வாழ்க்கை வரலாற்றினைக் குறிப்பிட்டு, அவர் ஆற்றிய கலைப்பணிகளை விளக்கியிருப்பின் - (20 புள்ளிகள்)

**வினா - 8**

"கிராமியக் கலைகள் மக்களது சமூக, சமய வாழ்வியலுடன் பின்னிப் பிணைந்துள்ளன" இக் கூற்றின் பொருத்தப்பாட்டினை விளக்கியிருப்பின் - (20 புள்ளிகள்)

**இரண்டாம் பகுதி வினாக்களுக்கான குறிக்கோள்கள் பற்றிய அறிமுகம்**

**பகுதி I**

1. i. கற்ற பதவர்ணத்தின் இராகம், தாளம் என்பவற்றை அறிந்து எழுதுவர்.
   ii. பதவர்ணத்தின் பாடலை எழுதியவர், நாட்டிய அமைப்புச் செய்தவர் ஆகியோரைக் குறிப்பிடுவர்.
   iii. பதவர்ணத்தின் சரணஸ்வரக் கோர்வையினை தாள அங்கக் குறியீட்டுடன் எழுதுவர்.
   iv. பதவர்ணத்தின் முதலாவது தீர்மானத்தைத் தாள அங்கக் குறியீட்டுடன் எழுதுவர்.

2. i. குச்சுப்புடி நடனத்தின் தோற்றம் பற்றிக் குறிப்பிடுவர்
   ii. குச்சுப்புடி நடனத்திற்குப் பயன்படுத்தப்படும் ஆடை, அணிகலன்களை எழுதுவர்.
   iii. குச்சுப்புடி நடனக் கலைஞர்கள் இருவரின் பெயர்களைக் குறிப்பிட்டு இந்நடனத்திற்கு பயன்படுத்தப்படும் இசைக்கருவிகளையும் குறிப்பிடுவர்.
   iv. குச்சுப்புடி நடன நாடகம் பற்றி விளக்கி எழுதுவர்.
   v. குச்சுப்புடி நடனம் வளர்ச்சியடைந்த விதத்தைப் பற்றி விளக்கி எழுதுவர்.

3. i. தாளதசப் பிராணன்களைக் குறிப்பிட்டு எழுதுவர்
   ii. “யதி” என்பதற்கு விளக்கம் தருவர்
   iii. யதியின் வகைகளைக் குறிப்பிடுவர்
   iv. யதியின் வகைகளை விரிவாக எழுதுவர்.

**பகுதி II**

4. i. சப்த தாளங்களைக் குறிப்பிடுவர்
   ii. சப்த தாள அங்கக் குறியீடுகளைக் குறிப்பிடுவர்
   iii. சப்த தாளங்கள் 35 தாளங்களாகும் வகையினை உதாரணங்களுடன் விளக்குவர்
   iv. 35 தாளங்கள் 175 தாளங்களாகும் வகையினை உதாரணங்களுடன் விளக்கி எழுதுவர்

5. i. சங்ககால ஆடற் கலைஞர்களின் பெயர்களைக் குறிப்பிடுவர்
   ii. சங்ககால ஆடல் வகைகளில் குரவை, துணங்கை, வெறியாட்டு என்பன பற்றி தனித் தனியே விளக்கி எழுதுவர்
   iii. சங்ககால ஆடல்கள் மக்களது வாழ்வியலோடு ஒன்றிணைந்திருந்தமையினை உதாரணங்களுடன் விளக்குவர்.

6. i. மகிடிக் கூத்தினைப் பற்றி அறிந்து எழுதுவர்
   ii. கலாஷேத்திரா பற்றி அறிந்து எழுதுவர்
   iii. அபிநயதர்ப்பணம் பற்றி அறிந்து எழுதுவர்
   iv. தூதர் இலட்சணங்களைப் பற்றி அறிந்து எழுதுவர்

7. கலைச்செல்வன் ஏரம்பு சுப்பையா அவர்களின் வாழ்க்கை வரலாற்றினைக் குறிப்பிட்டு அவர் ஆற்றிய கலைப்பணிகளையும் விளக்குவர்

8. "கிராமியக் கலைகள் மக்களது சமூக, சமய, வாழ்வியலுடன் பின்னிப் பிணைந்துள்ளன" இக் கூற்றினை அறிந்து எழுதுவர்.

## பகுதி II

01.

i. **நீர் கற்ற பதவர்ணத்தின் இராகம், தாளம் என்பவற்றைத் தருக.**

இராகம் :- ஆனந்தபைரவி / பூர்வி கல்யாணி

தாளம் :- ஆதி / ஆதி (02 புள்ளிகள்)

ii. **நீர் கற்ற பதவர்ணத்தின் பாடலை எழுதியவர், நாட்டிய அமைப்புச் செய்தவர் ஆகியோரைக் குறிப்பிடுக.**

**ஆனந்தபைரவி**

பாடலை எழுதியவர் - தஞ்சை சிவானந்தம்

நாட்டிய அமைப்பு - திருமதி ருக்மணிதேவி அருண்டேல்

**பூர்வி கல்யாணி**

பாடலை எழுதியவர் - கே. என் தண்டாயுதபாணிப் பிள்ளை

நாட்டிய அமைப்பு - திருமதி. கிருஷாந்தி ரவீந்திரா

(02 புள்ளிகள்)

**iii. நீர் கற்ற பதவர்ணத்தின் முதலாவது சரணஸ்வரக் கோர்வையினைத் தாள அங்கக் குறியீட்டுடன் எழுதுக.**

**1வது சரணஸ்வரக் கோர்வை (ஸகியே...)**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| தகதமி தகதிமி தகதிமி தகதிமி | / | தத், தெய், தா ஹா | / | தக ததிங்கிணதொம், | // |
| தகதிமி தகதிமி தகதிமி தகதித்த | / | , தெய்திதிதெய்தித்தாதெய் | / | திதிதெய்தித்தா தெய்திதிதெய் | // |

**(06 புள்ளிகள)**

**iv. நீர் கற்ற பதவர்ணத்தின் முதலாவது தீர்மானத்தினை தாள அங்கக் குறியீட்டுடன் எழுதுக.**

**பதவர்ணம் (ஸகியே...)**

**இராகம் :- ஆனந்தபைரவி** **சாகித்திய கர்த்தா - சிவானந்தம்**

**தாளம் :- ஆதி** **நடன அமைப்பு - ஸ்ரீமதி ருக்மணிதேவி அருண்டேல்**

**1வது தீர்மானம்**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| தா ;;; ரி,; த,; ரி,; த,; கி,; ண,; | / | த,; க,; ண,; க,; | / | ஜெம், ;;; ஜெம், ;;; | // |
| த,; த,; ரி,; த,; ரி,; த,; கி,; ண,; | / | த,; க,; ண,; க,; | / | ஜெம், ;;; ஜெம், ;;; | // |
| தா ; ரி, த, ரி, த, கி, ண, த, க, ண, க, ஜெம்,; ஜெம்,; | / | த , த, ரி, த, ரி, த, கி, ண, | / | த, க, ண, க, ஜெம்,; ஜெம்,; | // |
| தா ; ரி, த, ரி, த, கி, ண, த, க, ண, க, ஜெம்,; ஜெம்,; | / | த , த, ரி, த, ரி, த, கி, ண, | / | த, க, ண, க, ஜெம்,; ஜெம்,; | // |

தா ரித ரித கிண தகணக ஜெம், ஜெம், த , த , ரி , த , ரி , த ,

கி , ண , த , க , ண , க , ஜெம் , ஜெம் , / தா ரித ரித கிண தகணக ஜெம், ஜெம், / ததரித ரிதகிண தகணக ஜெம் , ஜெம் , //

தாரித கிண ஜெம் , ததரித கிணஜெம் , ததிந்தகதித் , தா

; கிடதக தரிகிட தொம், / தரிகிட தொம், ததிந்தக தித், தா; கிடதக / தரிகிடதொம், தரிகிட தொம், ததிந்தக தித்,தா//

; கிடதக தரிகிட தொம், தரிகிட தொம்,...

**(10 புள்ளிகள்)**

iii. **நீர் கற்ற பதவர்ணத்தின் முதலாவது சரணஸ்வரக் கோர்வையினைத் தாள அங்கக் குறியீட்டுடன் எழுதுக.**

**1வது சரணஸ்வரக் கோர்வை (சுவாமியை வரச்சொல்லடி...)**

த,க,த,மி, தெய், தெய், திதிதெய்,

த,க,த,மி, தெய், தெய், திதிதெய், / த,க,த,மி, தெய், தெய்,

திதிதெய், /தெய், தெய், திதிதெய்,

தெய், தெய், திதிதெய், //

த, ; க , ; தி , ; மி , ; த, ; க, ; தி , ; மி , ; / த , க , தி , மி , திதிதெய் , திதிதெய் / திதிதெய், திதிதெய், திதிதெய், திதிதெய் , //

**(06 புள்ளிகள்)**

iv. **நீர் கற்ற பதவர்ணத்தின் முதலாவது தீர்மானத்தினை தாள அங்கக் குறியீட்டுடன் எழுதுக.**

**பதவர்ணம் (சுவாமியை வரச்சொல்லடி...)**

**இராகம் :- பூர்வி கல்யாணி**    **சாகித்திய கர்த்தா - கே.என்.தண்டாயுதபாணிப்பிள்ளை**

**தாளம் :- ஆதி**    **நடன அமைப்பு - திருமதி. கிருஷாந்தி ரவீந்திரா**

**1வது தீர்மானம்**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| த ,;;; தி ,;;; தா ;;; க,; த,; | / | ஜெம் ,;;; த,; ரி,; | / | கி,; ட,; த,; க,; | // |
| ;; த,; த,; ரி,; ;; த,; த,; ண,; | / | ;; த,; ஜொ,; ணு,; | / | ;; த,; தி,; மி,; | // |
| த,; க,; தி ,;;; தா ;;; க,; த,; | / | ஜெம் ,;;; த,; ரி,; | / | கி,; ட,; த,; க,; | // |
| ;; த,; த,; ரி,; ;; த,; த,; ண,; | / | ;; த,; ஜொ,; ணு,; | / | ;; த,; தி,; மி,; | // |
| த,; தி,; தா; க, த, ஜெம்,; த, ரி, கி, ட, த, க, | / | ; த த, ரி, ; த, த, ண, | / | ; த, ஜொ, ணு, ; த, தி, மி, | // |
| த, க, தி,; தா; க, த, ஜெம்,; த, ரி, கி, ட, த, க, | / | ; த த, ரி, ; த, த, ண, | / | ; த, ஜொ, ணு, ; த, தி, மி, | // |
| த, தி,தாகத, ஜெம், தரிகிடதக ,ததரி ,ததண ,தஜொணு ,ததிமி | / | தகதி, தாகத, ஜெம், தரிகிடதக | / | ,ததரி ,ததண ,தஜொணு ,ததிமி | // |
| த, தி,தாகத, ஜெம், தரிகிடதக தகதி, தாகத, ஜெம், தரிகிடதக | / | கிடதி, தாகத, ஜெம், தரிகிடதக | / | தகதி, தாகத, ஜெம், தரிகிடதக | // |
| த, தி,தாகத, ஜெம்,; தகதி, தாகத ஜெம்,; ததரி, ததண, | / | தஜொணு, ததிமி, கிடதக தரிகிடதொம், த, | / | கிடதகதரிகிட தொம், தகதிகு கிடதகதரிகிட தொம், | // 3 தரம் |

**( 10 புள்ளிகள் )**

**02. i. குச்சுப்புடி நடனத்தின் தோற்றம் பற்றிக் குறிப்பிடுக.**

- குச்சுப்புடி நடனம் இந்தியாவின் ஆந்திர மாநிலத்தில் உருவான ஒரு நடன வடிவமாகும்.
- இந்தியாவின் ஆந்திர மாநிலத்தில் கிருஸ்ணா மாவட்டத்தில் உள்ள திவி தாலுகாவிற்குட்பட்ட ஒரு கிராமத்தின் பெயரே குச்சுப்புடி ஆகும்.
- கிருஸ்ணா மாவட்டமானது வங்கக் கடலின் ஓரமாக அமைந்துள்ளது.
- இங்கு வாழும் பிராமணர்கள் இப் பாரம்பரிய நாட்டியத்தை உருவாக்கி வளர்த்து வந்தனர்.
- இதனால் இந்நாட்டிய வடிவமானது அக்கிராமத்தின் பெயரான குச்சுப்புடி என்ற பெயரைப் பெற்றது.

(3 புள்ளிகள்)

**ii. குச்சுப்புடி நடனத்திற்குப் பயன்படுத்தப்படும் ஆடை, அணிகலன்களைக் குறிப்பிடுக.**

- "புறுகு" (Booruhu) எனப்படும் மிகவும் பாரம் குறைந்த ஒரு வகை மரத்தைப் பாவித்து செய்யப்பட்ட ஆபரணங்களையே பொதுவாக அணிவர். (32 வகையான ஆபரணங்கள்)
- ஒப்பனை மிகவும் எளிமையானதாகவே காணப்படும்.
- பட்டுப் புடவைகளில் எடுப்பான நிறத்தில் அமைந்தவைகளைப் பெண்கள் அணிவர்.
- பல வண்ண காகிதங்கள், கண்ணாடித் துண்டுகளைக் கொண்டு அலங்கரிக்கப்பட்ட உடைகள் இயல்பாக அணியும் கை, கழுத்து, காதணிகளைத் தவிர இவர்கள் அணியும் பல தலை ஆபரணங்களும் குறிப்பிடதக்கவை.

(3 புள்ளிகள்)

**iii. குச்சுப்புடி நடனக் கலைஞர்கள் இருவரின் பெயர்களைக் குறிப்பிட்டு, இந்நடனத்தில் பயன்படுத்தப்படும் இசைக்கருவிகளையும் குறிப்பிடுக.**

- டாக்டர் ஸ்ரீ வேம்படி சின்ன சத்தியம், பேரய்யா சாஸ்திரி, லக்சுமி நாராயண சாஸ்திரி, சிந்தாவேங்கடராமையா, சிந்தா வெங்கடரத்னம்
- மிருதங்கம், சல்லாரி, கடம், தம்புரா, வீணை, புல்லாங்குழல், வயலின்.

(4 புள்ளிகள்)

**iv. குச்சுப்புடி நடன நாடகங்கள் பற்றி விளக்குக.**

- அக்காலத்தில் கோவிலுக்கு முன் அமைக்கப்பட்டுள்ள அரங்கிலே குச்சுப்புடி நடன நாடகங்கள் இரவிலே இடம்பெற்றன.
- அரங்கத்திற்கு வெளிச்சமூட்டும் இரு விளக்குகளை வைத்திருப்போர் பல நிறங்களையுடைய திரைச்சீலையைத் தாங்கிக் கொண்டிருப்பர்.
- நடன நாடகத்திற்காக வாய்ப்பாட்டு, மிருதங்கம், சல்லாரி முதலியன இடம்பெறும்.
- இராமாயணத்தை அடிப்படையாகக் கொண்ட இராம நாடகம், ருக்மணி கல்யாணம், பிரகல்பதா சரித்திரம், பாணாசுரம், பாமாகலாபம் போன்றவை மிகப்பழைய குச்சுப்புடி நாடகங்கள்.
- சித்தேந்திர யோகியின் பாமா கலாபம் இராமாயணத்தை அடிப்படையாகக் கொண்ட நாடகம். இது கி.பி 17 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இயற்றப்பட்டது.
- கிருஸ்ண பகவானின் மிகுந்த அன்புக்குரியவளாக கருதிய சத்தியபாமா தேவலோகத்திலுள்ளதும், என்றும் வாடாத மலர்களைக் கொண்டதுமான பாரிஜாத மரத்தினை தனது நந்தவனத்தில் நடுவதற்காக அதனைப் பெயர்த்துக் கொண்டு வரும்படி கிருஸ்ண பகவானை தூண்டுதலே இதில் கூறப்படும் நடன நாடக வெளிப்பாடாகும்.

- சத்தியபாமா கிருஸ்ண பகவானிடத்தும், கிருஸ்ண பகவான் அவளிடத்தும் கொண்டுள்ள ஒப்பற்ற அன்பு நாயக, நாயகி பாவ முறையில் இங்கு இடம்பெறுகிறது. (6 புள்ளிகள்)

v. **குச்சுப்புடி நடனம் வளர்ச்சியடைந்த விதத்தைப் பற்றி விளக்கி எழுதுக.**

- கோல்கொண்டா மன்னரான அப்துல் ஹசன் தனேசா காலத்தில் இந்நடனமானது நேர்த்தியடைந்தது.
- இதற்கென இம்மன்னன் 600 ஏக்கர் நிலத்தினை அக்கிராமத்து மக்களுக்கு அன்பளிப்பாக கொடுத்தான்.
- சித்தேந்திரயோகி என்பவரே இன்று காணப்படுகின்ற நாட்டிய நாடகத்தை முதலில் வடிவமைத்தவர்.
- வேம்படி சின்ன சத்தியத்தினால் உருவாக்கப்பட்ட மாணவர்கள் 1000 இற்கும் மேற்பட்டோர். இவர்களிலே சந்திரகலா, வைஜயந்தி மாலா, சோபா நாயுடு, ஹேமமாலினி, யாமினி கிருஸ்ணமூர்த்தி, ஜயலலிதா, பத்மா மேனன் போன்றோரைக் குறிப்பிடலாம்.
- ஆந்திராவை மையமாகக் கொண்டு சாதவாகன மன்னர் கி.மு 200 - கி.பி 225 வரை ஆட்சி புரிந்தவர். இவர் கலைகளை ஆதரித்தவர். கிரியைகளுக்காக நடனம் ஆடுவதற்கு 300 தேவதாசிகளை நியமித்திருந்தார் என கல்லெட்டுக்கள் சான்று பகர்க்கின்றன.
- கி.பி 14 ஆம் நூற்றாண்டளவிலே கலிங்க தேசத்தைச் சேர்ந்த நரக தீர்த்த எனும் ஞானி கிருஸ்ண வழிபாட்டினைப் பரப்பி, பக்தி மார்க்கத்தை பரப்ப கிருஸ்ணர், ராதை பற்றிய கீதகோவிந்தத்தினை பாடி ஆடுவதற்காக கலிங்கத்திலிருந்து நடனக் கலைஞர்களை ஆந்திராவிற்கு கொண்டு வந்தார்.
- திருமால், கிருஸ்ண வழிபாடுகள் செல்வாக்குப்பெற அந்தண பக்தர்கள் பாகவத புராணத்தை அடிப்படையாகக் கொண்டு நடன நாடகங்களை எழுதினர்.

(5 புள்ளிகள்)

**(மாணவர் விடைக்கேற்பப் புள்ளிகளை வழங்கவும்)**

**03.**

i. **தாள தசப்பிராணன்களைக் குறிப்பிடுக.**

- காலம், மார்க்கம், கிரியை, அங்கம், கிரகம், ஜாதி, களை, லயம், யதி, பிரஸ்தாரம்

(2 புள்ளிகள்)

ii. **யதி என்பதற்கு விளக்கம் தருக.**

- இது தாளத்தின் அல்லது பாட்டின் அமைப்பிலுள்ள ஒரு குறிப்பிட்ட வகை அணியைக் குறிக்கும்.
- ஒரு தாளத்தின் அமைப்பிலுள்ள அங்கங்களைப் பலவகை அமைப்புக்களில் பிரஸ்தாரம் செய்து காட்டுவது.
- சுருதிக்கு ஸ்வரப் பிரஸ்தாரம் எவ்வளவு முக்கியமோ அது போல் தாளத்திற்கு யதி பிரஸ்தாரம் மிக முக்கியம்.
- லயங்கள் பலவற்றை அழகாகத் தொடுக்கும் முறைகள் பற்றிய வரிக்கோலம்.
- இது ஜதி அல்லது ஸ்வரம் இறுதிப் பகுதியில் மகுடமாக அமையும். இது தாளப்பிரஸ்தாரத்திற்கு ஒரு அலங்காரமாகும்.

(3 புள்ளிகள்)

iii. **யதியின் வகைகளைக் குறிப்பிடுக.**

- சமயதி / பிபிலிகம்
- விசமயதி
- மிருதங்க யதி
- வேதமத்யமம் / டமருக யதி
- கோபுச்ச யதி
- ஸ்ரோதோவஹ யதி (3 புள்ளிகள்)

iv. **யதியின் வகைகளை விரிவாக விளக்குக.**

**சமயதி / பிபிலிகம்**

- பெரிய அங்கமாயினும் சிறிய அங்கமாயினும் ஒரே விதமாக வருவது சம யதி என்று அழைக்கப்படும்.

உதாரணம் : தகதிமி
தகஜொணு
தகதிமி
தகஜொணு

உதாரணம் : கிடதக தரிகிட தொம்
கிடதக தரிகிட தொம்
கிடதக தரிகிட தொம்
கிடதக தரிகிட தொம்

**விசமயதி**

- இது சமத்தினுடைய எதிர், அதாவது எல்லா அங்கங்களும் வரிசைக் கிரமம் தப்பி வருவது. இதில் எல்லா அங்கங்களும் ஒரே அளவாக இருக்கமாட்டாது.

உதாரணம் : தகிட
ததிங்கிணதொம்
தக
தகதிமி
த
தகதிகு ததிங்கிணதாம்

உதாரணம் : தரிகிட தொம்
தக திகு கிடதக தரிகிட தொம்
கிடதக தரிகிட தொம்
தொம்
தகதிகு கிடதக தரிகிட தொம்

**மிருதங்க யதி**

- மிருதங்கத்தின் அமைப்பைப் போன்று முதலிலும் முடிவிலும் சிறுத்து நடுவில் பெருத்திருக்கும்.

உதாரணம் : தக
தகிட
தகதிமி
தகதகிட
தகதகிட
தகதிமி
தகிட
தக

உதாரணம்: தரிகிடதொம்
கிடதக தரிகிட தொம்
தக் கிடதக தரிகிட தொம்
கிடதக தரிகிட தொம்
தரிகிடதொம்

**வேதமத்யமம் / டமருக யதி**

- டமருகம் போன்று முதலிலும் கடைசியிலும் பெருத்து நடுப்பகுதி சிறுத்திருக்கும்.

உதாரணம் : தகதிமி
தகிட
தக
தகிட
தகதிமி

உதாரணம் : தத்தித்தக் கிடதக தரிகிட தொம்
தித்தக் கிடதக தரிகிட தொம்
கிடதக தரிகிட தொம்
தித்தக் கிடதக தரிகிட தொம்
தத்தித்தக் கிடதக தரிகிட தொம்

**கோபுச்ச யதி**

- பசுவின் வால் போன்று ஆரம்பத்தில் பெருத்தும் போகப் போகச் சிறுத்தும் இருக்கும். "கோபுச்சம்" என்றால் மாட்டின் வால் என்று பொருள்படும். மாட்டின் வால் நுனியில் கொத்தாகத் தொங்குகின்ற பாகத்திற்குப் புச்சம் என்று பெயர்

  உதாரணம் : தக தகிட
  தகதிமி
  தகிட

  உதாரணம் : தகதிகு ததிங்கிணதொம்
  தக ததிங்கிணதொம்
  ததிங்கிண தொம்
  கிண தொம்
  தொம்

**ஸ்ரோதோவஹ யதி**

- இது நதியைப் போன்று முதலில் சிறுத்தும் பின்பு பொருந்தும் செல்லும். இதனைப் பர்வத யதி என்றும் அழைப்பர். பர்வதம் என்றால் மலை, சிகரம் என்று பொருள்படும்.

  உதாரணம் : த
  தக
  தகிட
  தகதகிட
  தகிடதகிட

உதாரணம் : தரிகிடதொம்
கிடதகதரிகிடதொம்
தக் கிடதகதரிகிட தொம்
தித் தக் கிடதக தரிகிடதொம்
தத் தித் தக் கிடதக தரிகிட தொம் (12 புள்ளிகள்)

**(மாணவர் விடைக்கேற்ப்ப புள்ளி வழங்கவும்)**

**04. i. சப்த தாளங்களைக் குறிப்பிடுக.**

- துருவ தாளம்
- மட்டிய தாளம்
- ரூபக தாளம்
- ஜம்பை தாளம்
- அட தாளம்
- திரிபுடை தாளம்
- ஏக தாளம்

(2 புள்ளிகள்)

**ii. சப்த தாளங்களின் தாள அங்கக் குறியீடுகளை எழுதுக.**

- துருவ தாளம் – 1011
  மட்டிய தாளம் – 101
  ரூபக தாளம் – 01
  ஜம்பை தாளம் – 1U0
  அட தாளம் – 1100
  திரிபுடை தாளம்– 100
  ஏக தாளம் – 1

(3 புள்ளிகள்)

**iii. சப்த தாளங்கள் 35 தாளமாகும் வகையினை உதாரணங்களுடன் விளக்குக.**

- இங்கு வரும் 5 ஜாதிகளும் திரியாங்கம் என்னும் மூன்று உறுப்புக்களின் சேர்க்கையினால் உண்டாகும் 7 தாளங்களும் சேர்ந்து ஜாதிபேதம் ஆகுங்கால் 7 × 5 = 35 தாளங்கள் தோன்றும்.

(5 புள்ளிகள்)

**iv. 35 தாளங்கள் 175 தாளங்களாகும் வகையினை உதாரணங்களுடன் விளக்குக.**

- 35 தாளங்கள் பஞ்ச கதிகளினால் பேதம் அடையும் பொழுது 35 × 5 = 175 தாளங்கள் உண்டாகின்றது.

(10 புள்ளிகள்)

**(மாணவர் விடைக்கேற்பப் புள்ளிகளை வழங்கவும்)**

**05. i. சங்ககால ஆடற் கலைஞர்களின் பெயர்களைக் குறிப்பிடுக.**

- கோடியர் , கூத்தர், வயிரியர், கண்ணுளர், பொருநர், விறலியர்

(2 புள்ளிகள்)

**ii. சங்ககால ஆடல் வகைகளில் துணங்கை, வெறியாட்டு என்பன பற்றி தனித்தனியே விளக்குக.**

**குரவை**

- வெற்றியின் காரணமாக சங்கால மக்கள் குரவை ஆடியுள்ளனர்
- குரவை குறவஞ்சி நிலக்குரவை, முல்லைத் திணைக்குரவை, மருதநிலக் குரவை, நெய்தல் நிலக்குரவை, பாலை நிலக் குரவை எனக் காணப்படுகிறது.
- குறவஞ்சி நிலம் என்பது மலை நிலம், மலை வாழ் மக்களால் குன்றக் குரவை ஆடப்பட்டது.
- முல்லைத் திணைக் குரவை காட்டு நிலத்தில் வாழும் வேடுவர் குரவை ஆடிய செய்தி கூறப்படுகிறது.
- மருத நிலக்குரவை என்பது வயல் நிறைந்த பகுதியில் உழவர் ஆடிய குரவையாகக் காணப்படுகிறது.
- நெய்தல் நிலக்குரவை கடல் சார்ந்த பகுதியினர் ஆடிய குரவையாகக் செய்திகள் காணப்படுகின்றன.
- பாலை நிலக்குரவை மணல் சார்ந்த பகுதியினர் ஆடிய குரவையாகக் செய்திகள் காணப்படுகின்றன.

(3 புள்ளிகள்)

**துணங்கை**

- துணங்கை ஆடலை ஒரு விழாவாகச் சங்க காலத்தில் கொண்டாடினர்
- மதுரைக்காஞ்சி, பெரும்பாணாற்றுப்படை நூல்கள் துணங்கைக் கூத்தைச் சிறப்பிக்கின்றன.
- சங்ககாலத்தில் பெண்களால் மட்டும் துணங்கைக் கூத்து ஆடப்பட்டது

(2 புள்ளிகள்)

**வெறியாடல்**

- வெறியாடல் என்பது அகத்திணை மற்றும் புறத்திணை எனும் இரு திணைகளிலும் நடைபெறும்
- அகத்திணையில் தலைவியின் நலம் கருதி வெறியாடுதல் உண்டு
- அகத்திணை வெறியாட்டத்தில் ஆடவர் மட்டுமன்றி மகளிரும் வெறியாட்டம் செய்துள்ளனர் எனச் சங்க இலக்கியம் கூறுகிறது.
- வெறியாட்டம் செய்யும் பெண் ஆடுமகளீர் என அழைக்கப்பட்டனர்.
- வெறியாடும் பெண்களை கணிக்காரி, சாலினி என அழைத்தனர்

(3 புள்ளிகள்)

**iii. சங்ககால ஆடல்கள் மக்களது வாழ்வியலோடு ஒன்றிணைந்திருந்தமையினை உதாரணங்களுடன் விளக்குக.**

- சங்க காலத்தில் மக்களும் மன்னரும் இவ்வுலக இன்பங்களை நன்கு அறிந்து வாழ்ந்தனர்.
- தனிமனித உணர்வுகளான மகிழ்ச்சி, அழுகை இரக்கம், வெற்றிக்களிப்பு இவற்றை வெளிப்படுத்தும் செயற்பாடாக அக்கால நடனம் காணப்பட்டது.
- வேத்தியல், பொதுவியல் என்ற இரு நடனங்கள் காணப்பட்டது. மக்கள் அவையில் தனித்து கற்றிருந்த நடனம் வேத்தியல் ஆகும்.
- தேவை கருதி பொது இடங்களில் நடனம் செய்தது பொதுவியல் எனப்பட்டது.
- சங்க காலத்தில் வாழ்ந்த பாணர், விறலியர், கூத்தர் போன்றவர்கள் மன்னனின் வெற்றியைப் போற்றி பாடல் இசைத்தும், வாத்தியங்கள் வாசித்தும் ஆடி வந்தார்கள்.

- விறலியர்களும், கூத்தர்களும் ஊர்ஊராகச் சென்று மன்னர்களைப்பாடி பரிசில்கள் பெற்றனர்.
- பரிசில்கள் பெற ஊர் விட்டு சென்ற விறலியர், கூத்தர் என்போர் தாமாகவே கற்றுத் தேர்ந்த கூத்து, நடனம் என்பவற்றை அவ்வூர்களிலேயே நிகழ்த்தினார்கள்.
- அவ்வூர்களில் உள்ள கூத்து இசைமரபுகளை கற்றுத் தங்கள் கலைகளை புதுப்பித்துக் கொண்டனர்.
- சங்ககாலத்தில் எழுந்த இலக்கியங்கள் அனைத்திலும் மானுடக்காதலே பேசப்படுகிறது.
- சங்ககால நடனம், இசை போன்றன மகிழ்ச்சியூட்டும் சாதனமாகவே காணப்படுகிறது.
- மக்களுக்கு மன்னர்களின் வீரம், வெற்றி, கொடை, தொழில் என்பவற்றை அறிவிக்கும் ஊடகமாக இருந்தது.
- சங்ககாலத்தில் ஐவகை நிலங்களிலும் மக்கள் குரவை ஆடிய செய்திகள் காணப்படுகிறது.
- நடனமாடும் விறலியரின் அழகையும் குரவைக் கூத்தையும், வெற்றிக் கூத்தையும் மக்கள் ஆடியதை சிறுபாணாற்றுப் படையில் காணலாம்.
- சங்க காலத்தில் உண்டாட்டு என்பது பகைவர் நாட்டின் மிது படை நடத்தி பசுக் கூட்டங்களைக் கவர்ந்து தன்நாட்டு மக்களுடன் பகிர்ந்து மகிழ்வுடன் கள்ளினை அருந்தியாடுவது மக்கள் வாழ்க்கையுடன் தொடர்புபட்டு காணப்படுகிறது
- சங்ககால மக்களது வாழ்க்கையில் ஒவ்வொரு சடங்கு முறையுடனும் ஆடல் ஒன்றிணைந்துள்ளது.
  (உ+ ம்) வேலன் வெறியாட்டு
- அக்கால மக்களது நம்பிக்கைகளுடன் ஆடல் தொடர்புபட்டுள்ளது
- மக்களின் பக்தி உணர்வின் மேலீட்டினை ஆடல் மூலம் வெளிப்படுத்தியமை
- குரவைப்பாடல்கள் ஐவகை நில மக்களது பண்பாடுகளையும் பிரதிபலிப்பனவாக உள்ளது.
  (உ+ ம்) குரவை ஒப்பனை முறை
- ஐந்து நிலத்திற்குமுரிய வாழ்க்கையின் பண்புகளை குரவையாடல்கள் வெளிப்படுத்துகின்றன.
- சங்ககால மக்களது போர் முறைகளையும் வீரப்பண்புகளையும் குரவையாடல்கள் புலப்படுத்துகின்றன.

(10 புள்ளிகள்)

**(மாணவர் விடைக்கேற்ப்ப புள்ளி வழங்கவும்)**

06.i. **மகிடிக்கூத்து**

- மகிடி என்பது மந்திர விளையாட்டுக்களைக் குறிக்கும். தெய்வம் ஆடுவது இடம்பெறும். சில இடங்களில் சிறு தெய்வம் கருவாக அமைந்திருக்கும்.
- மகிடிக் கூத்தில் மூன்று வகை உண்டு. ஒண்டிப்புலி என்பவன் தன் மனைவி காமாட்சியுடன் மலையாள தேசத்தில் இருந்து வரும் வழியில் குறவர்களுடன் மட்டக்களப்பிற்கு வருகிறார்கள். அங்கு மந்திர தந்திர விளையாட்டுக்களில் ஈடுபட்டு பல துன்பங்களை அனுபவித்து காளியின் அருளால் வெற்றி பெறும் கதையைப் பாரம்பரியமாக நிகழ்த்தப்படுவது.
- கதையம்சம் குறைவு, மந்திர தந்திர விளையாட்டுக்களை வேடன், வேட்டுவிச்சி, வெள்ளைக்காரன், வெள்ளைக்காரி பார்ப்பது போலவும் இடையிற் புலி தோன்றி புலி ஆட்டம் ஆடுவது போலவும் இம் மகிடியின் அமைப்பு உள்ளது. மகிடிக்கூத்தை சாம்பல் பூசிய சாம்பலாண்டியர் நடாத்துவர்.
- மகிடிக்கூத்து தனக்கென ஏட்டுடையது இதுவும் மந்திர தந்திரங்களை உள்ளடக்கியது.
- சிறு தெய்வ வணக்க முறைகளைக் கொண்டிருப்பதுடன் தமிழ்நாட்டு தெய்வங்களையும் புராண காலத்து மாந்தரையும், குறவன் குறத்தியையும் கதாபாத்திரமாகக் கொண்டது.
- மகிடிக் கூத்தில் இரு கதைகள் வருகின்றன.

1. குறவன் குறத்தியான சிங்கன் சிங்கியின் கதை
2. அக்கா தங்கைமாரான காமாட்சி, மீனாட்சியுடையதும் மீனாட்சியின் மகன் அகத்தியர் தமது தகப்பனைத் தேடிக் காசிக்குச் செல்வதுமாக அமைந்த கதை.

- மேடையமைப்பு சமதள அரங்காக இருப்பினும் மேலும் இரண்டாகப் பிரிக்கப்பட்டு அரங்கின் மேற்பகுதி ஓரத்தில் நிலமட்டத்தில் இருந்து சற்று உயரமாக வட்ட மேடை ஒன்று காணப்படும். வட்ட மேடையைச் சுற்றி கம்புகள் நடப்பட்டு தென்னங்குருத்தினால் அலங்கரிக்கப்பட்டிருக்கும்.

(05 புள்ளிகள்)

ii. **கலாஷேத்திரா**

- 1936 ஆம் ஆண்டு அடையாறு பிரம்மஞான சங்கத்தின் அறுபதாம் ஆண்டு விழாவின் போது சர்வதேசக் கலைக் கழகமொன்று ஆரம்பிக்கப்பட்டது.
- இதுவே பின்னர் கலாஷேத்திரம் என்னும் பெயருடன் விளங்கிற்று.
- கலாஷேத்திரம் முதலில் அடையாற்றில் ஒரு பகுதியில் இயங்கி வந்தது. தற்போது திருவான்மியூரில் நிரந்தரமாக ஸ்தாபிக்கப்பட்டுள்ளது.
- கலாஷேத்திரப் பணியின் ஒரு பகுதியாக 1937 ஆம் ஆண்டில்நெசவுப் பகுதியொன்று ஆரம்பிக்கப்பட்டது.
- சென்னை அரசாங்கத்தில் தொழில் மந்திரியாயிருந்த கனம் வி.வி. சிரி ஆரம்பித்து வைத்தார்.
- ருக்மணிதேவி லட்சிய இந்திய இல்லத்தின் படங்களை சேகரித்து பொருட்காட்சியில் வைத்தார்.
- டாக்டர் மாண்டிஸோரியை கலாஷேத்திரத்தின் போசாகராக்கிய அவர் மாண்டிஸோர் முறையில் பயிற்சி அளிக்க ஏற்பாடு செய்தார்.
- ஆண்டுதோறும் நாடகங்கள் போடப்பட்டன. சில ஆண்டுகளுக்கு முன் ஆசிய ஜோதி நாடகம் போடப்பட்டது.
- பரதத்துடன் கதகளியும் நடிக்கப்படுகின்றன.
- மாணவர்களுக்கு இரண்டினதும் பயிற்சி அளிக்கப்பட்டது.
- இந்தியப் பண்பாடு, நாகரீகம், கலாச்சாரங்கள் இவற்றின் அடிப்படையிலேயே மாணவர்கள் பயிற்றுவிக்கப்படுகின்றனர்.
- ருக்மணி தேவியின் கலாஷேத்திரத்தில் இனம், சமயம் என்ற பிரிவினை இல்லாமல் சகோதர பாவத்தை வளர்ப்பதில் கண்டிப்பாக இருக்கிறார்.
- இந்தியாவின் கலாசார வாழ்க்கையின் கலங்கரை விளக்காக நின்று ஒளி வீசி வருகிறது.

(05 புள்ளிகள்)

iii. **அபிநயதர்ப்பனம்**

- நந்திகேஸ்வரால் வட மொழியில் எழுதப்பட்டநூல்
- அபிநய தர்ப்பணம் என்பது அபிநயத்தின் கண்ணாடி என்பதாகும்
- 10ம் நூற்றாண்டில் எழுதப்பட்டிருக்கலாம் எனக் கருதப்படுகிறது.நடன மாணவர், நடன ஆசிரியர்களால் பயன்படுத்தும் பொதுவான நூல் இதுவாகும்.
- 324 ஸ்லோகங்களைக் கொண்டது
- ஆங்கிகம் புவனம் என சிவனுக்குரிய ஸ்லோகத்துடன் தொடங்குகிறது
- சிவன் என்பது இச்செய்யுளில் பிரதானமாகக் காணப்படுகிறது
- நாட்டிய உற்பத்தி, நாட்டியத்தின் புகழ்ச்சி, நடன அபிநயவகைகள், மந்திரி, சபாபதி, சபா, சபாரசன, பாத்திரலக்ஷணம், அபாத்திரலக்ஷணம், பாத்திரப்பிரகிரமம், அபிநயங்கள், அங்கம், பிரத்தியாங்கம், உபாங்கம் கூறப்பட்டுள்ளது.
- இவற்றில் ஒன்பது சிரோ, நான்கு கிரீவா, அஸம்யுத, ஸம்யுத ஹஸ்தங்கள் தேவ, தசாவதார, ஜாதி, பாந்தவ்ய, நவக்கிரக ஹஸ்தங்கள் வர்ணிக்கப்பட்டள்ளது.

- பாதபேதங்கள் விரிவாக விபரிக்கப்பட்டுள்ளது
- கைகளின் வழி கண்களும் கண்களின் வழி மனமும், மனம்வழி பாவமும், பாவ வழி ரசமும் விளக்கப்பட்டுள்ளது.
- திரு. ஆனந்தகுமாரசாமி அவர்கள் ஆங்கிலத்தில் இந்த நூலை மொழிபெயர்த்துள்ளார்
- வீரராகவன் தமிழில் இதனை மொழிபெயர்த்துள்ளார்
- தாவர, பறவை விலங்குகளின் முத்திரைகள் பிற்சேர்க்கையாக இந்த நூலில் கூறப்பட்டுள்ளது.

(5 புள்ளிகள்)

iv. **தூதர் இலட்சனம்**

- நாயகர்களுக்கு சிருங்கார விடயங்களின் உதவியாக இருப்பவர்களைத் தூதர் என அழைப்பர். தூதர் 4 வகைப்படும்.

1. பீடமர்த்தன்
   நாயகியிடம் மதிப்பும் அன்பும் பெற்றவன் நாயகன் அன்புக்கு கொஞ்சம் குறைவான பிரியம் வைக்கப்பட்டவன் இவனே நாயகியின் கோபத்தை நாயகன் சார்பாகத் தணித்து மீண்டும் நாயகனிடம் பிரியம் வைக்கத் தூண்டுபவன்.
2. விகடன்
   சிருங்கார காம விஷயங்களில் கை தேர்ந்து, நாயகனுக்கு எடுத்துச் சொல்லி உதவி செய்பவன்
3. சேடன் (சேதகன்)
   நாயகி நாயகர்களை சேர்த்து வைப்பதிலும் சந்தேகங்கள் ஏற்படுத்துவதிலும் கெட்டிக்காரன்.
4. விதூஷகன்
   கோமாளி, விகடகவி போல் ஹாஸ்யரஸம் உற்பத்தியாகும்படி பேசி, சிரிப்பூட்டி விசித்திரமாக நாயகி நாயகர்களைச் சேர்த்து வைப்பவன்

(05 புள்ளிகள்)

07.**கலைச்செல்வன் ஏரம்பு சுப்பையா அவர்களின் வாழ்க்கை, வரலாற்றினைக் குறிப்பிட்டு, அவர் ஆற்றிய கலைப்பணிகளை விளக்குக.**

- இவர் 1922 ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 13 ஆம் திகதி யாழ்ப்பாணத்தைச் சேர்ந்த இணுவிலில் பிறந்தார்.
- தந்தையார் திருவாளர் க. ஏரம்பு, தாயார் தங்கமுத்து அம்மாள்.
- தலை சிறந்த அண்ணாவியாரும், நாட்டுக்கூத்து, விலாசம், நாடகம், காவடி ஆட்டம் முதலியவற்றில் புகழ் படைத்தவர்.
- மிருதங்கம் வாசிப்பதிலும், நட்டுவாங்கம் செய்வதிலும் கைதேர்ந்தவர்.
- இளம் வயதில் பெண் வேடம் தாங்கி நாடகங்களில் நடித்தும், நடனம் ஆடியும் மக்களின் மனதைப் பெரிதும் கவர்ந்தவர்.
- 1940 ஆம் ஆண்டில் இந்தியா சென்று காரைக்குடி இராமகான சபாவில் ஓர் நடிகரானார்.
- 1946 முதல் 1948 வரை கதகளி கிராமிய நடனம் என்பவற்றில் சிறந்த பயிற்சி பெற்றார்.
- 1948 மார்கழியில் திருவாளர் வி. ஆர். இராசநாயகம் அவர்களால் ஆரம்பிக்கப்பட்ட யாழ்ப்பாண நடனக் கல்லூரியில் நடன ஆசிரியரானார்.
- 1952 இல் அரசினர் பாடசாலைகளுக்கு நடன ஆசிரியராக நியமிக்கப் பெற்றார்.
- இவர் பயிற்றுவித்த அரிவி வெட்டு நடனம் இவரது மாணவிகளால் ஆற்றுகைப்படுத்தப்பட்டு அக்காலத்தில் பிரதமராயிருந்த சேர். ஜோன் கொத்தலாவல அவர்களின் பாராட்டினையும் பெற்றது.
- இந் நடனம் அகில இலங்கைப் போட்டியிலும் முதலிடத்தைப் பெற்றது.

- இவரது கலை நிகழ்ச்சிகளை பார்த்து மகிழ்ந்த பிரபல நடிகர் டி. கே. சண்முகம் அவர்களால் இவருக்கு கலைஞர் பட்டம் வழங்கப்பட்டது.
- 1956 இல் கொழும்பில் நடைபெற்ற விவசாய பொருட்காட்சியில் இவரது மாணவ மாணவிகளின் நடனத்தை மெச்சி உணவு அமைச்சின் காரியதரிசி திருவாளர் கே. ஆழ்வார் பிள்ளை அவர்களால் ஓர் தங்கப்பதக்கம் வழங்கப்பட்டது
- பல்வேறு நடனப் போட்டிகளிலும் சுதந்திர தின விழாக்களிலும், விவசாய விழாக்கள் போன்ற கலை நிகழ்ச்சிகளில் பங்கு பற்றி முதலிடத்தைப் பெற்றதுடன் தங்கப்பதக்கங்களையும் பெற்றார்.
- 1956 ஆம் ஆண்டு கொக்குவில் கலாபனம் என்ற கலைக்கோயிலை உருவாக்கி உலகில் மாபெரும் சாதனையை நிலைநாட்டினார்.
- கலாபவனத்தில் பயின்ற ஏழு பெண்கலைஞரைகளுக்கு அரங்கேற்றம் செய்து மிகுந்த பிரபல்யம் அடைந்தார்.
- கலாபவனத்தில் பிரத்தியேகமாக பயின்ற அநேக மாணவிகள் கலைத்துறையில் மேலதிக தேர்ச்சிகளைப் பெற இந்தியா சென்று தற்போது பல்கலைக்கழகங்களில் விரிவுரையாளராகவும், பாடசாலைகளில் ஆசிரியர்களாகவும் கடமையாற்றுகின்றார்கள்.
- 1958 இல் டெல்லியில் நடந்த உலக விவசாய பொருட்காட்சி விழாவில் ஆந்திர நடனக் குழுவினருடன் சேர்ந்து நடனமாடும் வாய்ப்புக் கிடைக்கப் பெற்றார்.
- 1960 இல் யாழ் பிரதேசக் கலை மன்றத்தினால் கௌரவிக்கப்பட்ட 7 கலைஞர்களில் திரு. சுப்பையா அவர்களும் ஒருவர். பொன்னாடை, தங்கப்பதக்கம் அளிக்கப்பட்டதுடன் கலைச் செல்வியினால் நடாத்தப்பட்ட விழாவில் பொன்னாடை போர்த்தப்பட்டு கலைச் செல்வன் என்ற பட்டமும் அளிக்கப்பட்டு கௌரவிக்கப்பட்டார்.
- 1966 ஆம் ஆண்டு குருநாகல் சுதந்திர தினவிழாவில் நடைபெற்ற நாட்டிய நிகழ்ச்சியில் கலந்து கொள்ளச் சென்ற சமயம் முதல் முறையாக உயர் இரத்த அழுத்தத்தினால் பாதிக்கப்பட்டார்.
- 1972 ஆம் ஆண்டு மீண்டும் நோயினால் பாதிக்கப்பட்டு யாழ் வைத்தியசாலையில் சிகிச்சை பெற்று குணமடைந்தார்.
- 1973 இல் இணுவில் பரமானந்த நூல் நிலையத்தினர் நடாத்திய பொங்கல் விழாவிலே திரு. ஏ. சுப்பையா அவர்களுக்கு திரு. சபா ஆனந்தர் “அபிநயம் அரசகேசரி” என்ற பட்டத்தை வழங்கி கௌரவித்தார்கள்.
- கலைத்துறையில் அரும்பெரும் சாதனைகள் ஆற்றிய இவர் 11.01.1976 இல் இவ்வுலகை விட்டு நீத்தார்.

(20 புள்ளிகள்)

(மாணவர் விடைக்கேற்ப புள்ளிகள் வழங்கவும்)

08. **கிராமியக் கலைகள் மக்களது சமூக, சமய வாழ்வியலுடன் பின்னிப் பிணைந்துள்ளன. இக்கூற்றின் பொருத்தப்பாட்டினை விளக்குக.**

- மக்களின் உள்ளத்திலே ஏற்படும் மகிழ்ச்சி, அன்பு, கோபம், துக்கம், கவலை, ஏக்கம், காதல், கனிவு, போட்டி போன்ற உணர்வுகள் பலவும் வெவ்வேறானாலும் உண்மை, நீதி, அன்பு, சமத்துவம் என உரிமைகள் சார்ந்த ஒடுக்கு முறைகளை மற்றவர்களிடமிருந்து உணர்ந்த போது தான் கலைகள் பரிமளித்தன.
- இக்கலைகளின் பிரிவுகளாக கும்மியாட்டம், கோலாட்டம், ஒயிலாட்டம், கரகாட்டம், குதிரையாட்டம், ஏந்தல் நடனம் இவை போன்று இன்னும் பல ஆடல் வகைகள் உள்ளன.
- கிராமியக் கலைகள் மக்களிடத்தில் நல்லெண்ணங்களை வளர்க்கின்றன.
- கிராமியக் கலைகள் மக்களிடத்தில் நல்லெண்ணத்தை வளர்க்கின்றது.
- சமூகத்தில் மனிதனாக வாழ வழி சமைத்துக் கொடுத்தன.
- கிராமியக் கலைகள் மக்களது வாழ்வியற் கூறுகளையும் அவர்களது பழக்க வழக்கங்களையும் படம் பிடித்துக் காட்டுகின்றது.
- கிராமியக் கலைகள் மக்களின் நாகரீகம், பண்பாடு, பழக்க வழக்கம், வரலாறு போன்ற நாட்டு நடப்புக்களை உண்மையான முறையில் படம் பிடித்துக் காட்டுகின்றன.
- இவை சமுதாய வளர்ச்சியைக் காட்டும் கண்ணாடி எனலாம்.
- சிறந்த வாழ்வியல் சிந்தனைகளைத் தருகின்றன.
- மனிதனுடைய மனதினைப் பயன்படுத்தி வையத்துள் வாழ்வாங்கு வாழக் கூடியவாறு அந்த மனிதனைச் சிறந்த மனிதனாக உருவாக்கிச் சமூகத்திற்குப் பரிசளிப்பதில் கிராமியக் கலைகளின் வகிபங்கு மிகவும் முக்கியமானது.
- சோகத்தில் வாடுகின்ற உள்ளங்களை இனிமைப்படுத்தி மகிழ்ச்சி எனும் வட்டத்திற்குள் கொண்டு வருவதே கிராமியக் கலைகள்.
- மனிதர்களின் மகிழ்ச்சிக்கு முக்கிய காரணமாய் அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கது.

(20 புள்ளிகள்)

**எல்லா வினாக்களுக்கும் மாணவர்களின் விடைக்கேற்பப் புள்ளிகளை வழங்கவும்**